# கரந்தைத் தமிழ்ச் சங்கம்

(பதிவுசெய்யப்பெற்றது)

## தஞ்சை

### ஏழ், எட்டாம் ஆண்டுகளின் அறிக்கை.

பிங்கள, காலயுத்தி (சித்திரை—மார்கழி).



திரு. வே. இராதாகிருட்டின பிள்ளை, பீ. ஏ.
சங்கம் நிறுவிய தங்கன்

திருச்சி
சண்முக விலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1919

# காரந்தைத் தமிழ்ச் சங்கம்.

விரோதிகிருது ௵ வைகாசி மீ ௧௨ நிறுவப்பெற்றது.

## ஆண்டுத் திருவிழாக்களில்

## தலைமை தாங்கியவர்கள்.

திரு. கா. நமச்சிவாய முதலியார் அவர்கள், சென்னை.

திரு. டீ. ஏ. இராமலிங்கம் செட்டியார் அவர்கள், பீ. ஏ., பீ. எல்., கோயமுத்தூர்.

திரு. இராவ் சாஹிப், தோ. இராமகிருட்டின பிள்ளை அவர்கள், பீ. ஏ., எவ். ஆர். எச். எஸ்., சென்னை.

திரு. திவான் பகதூர், சா. ராம. மு. இராமசாமிச் செட்டியார் அவர்கள், சிதம்பரம்.

திரு. மாட்சிமிக்க பா. இராசராசேசுவர சேதுபதி அவர்கள், இராமநாதபுரம்.

திரு. தி. செல்வக்கேசவராய முதலியார் அவர்கள், M. A., சென்னை.

காரந்தைத் தமிழ்ச் சங்கம்.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

(பதிவுசெய்யப்பெற்றது.)

தஞ்சை.

## ஏழ், எட்டு—ஆம் ஆண்டுகளின் அறிக்கை

### பிங்கள, காலயுத்தி (சித்திரை–மார்கழி) ஆண்டுகள்.

**தமிழ்க் கடன் பூண்ட அன்புமிக்க ஐயன்மீர் !**

‘இமயவடவரைகுமரியிருகடலும்புடைசூழ்ந்த
தமனியநாடிதுவென்னுந்தகைதருபாரதநாட்டின்
அழகுகெழுமுகமென்னவமைந்துதென்பாற்பொலிந்தோங்கி
யொழுகுபொன்னிபொருநைமுதலுயர்நதிபாய்வளம்படைத்துக்
குலவுதென்றல்வருபொதியில்கொல்லிமுதன்மலைபலவும்
சுலவுறவைந்திணைவளனுஞ்சுரந்துநலங்கொழித்துதவிச்
சரிதமுறுபதிபலவும்தழுவுதமிழகம்தழைப்ப
ஒருகுடைக்கீழ்த்தனியரசாயுவந்திருக்கும்தமிழ்த்தாயே !

ஈன்றெம்மையெடுத்தேந்தியெழின்முலையானமுதூட்டி
ஆன்றமழலையும்பயிற்றியகன்றிடுசொற்பொருளுணர்த்திப்
புல்லொழுக்கம்போக்குவித்துப்புகலுமுயிரினுஞ்சிறந்த
நல்லொழுக்கின்றலைநிறுவிநவிலுமுலகியல்புணர்த்தித்
தன்னுணர்ச்சியெமக்களித்துத்தற்காலவுணர்ச்சியொடும்
முன்னுணர்ச்சியறிவித்தூமுத்திவழிகாட்டினையால்!
அத்தகுநின்றிறம்வியந்தேயகநெகிழ்ந்துமகிழ்சிறந்து
வைத்தபெருங்காதலினல்வாயாரவாழ்த்துவமே!’

**எ**னப் பல படியாகப் போற்றி அந்தமிலின்பச் செந்தமிழ்த் தாயை வாழ்த்தி வழிபடும் உண்மைத் தொண்டர் குழீஇய இக்கரந்தைத் தமிழ்ச் சங்கம் இறைவன் திருவருளால் ஏழாவதாண்டும், எட்டாவதாண்டும் நிரம்பப் பெற்றது. எனினும், இம்மகவு தனதிளமையிலேயே தன்னைச் சீராட்டிப் பாராட்டிப் போற்றிய தன் அருமைத் தாயினை யிழந்து தத்தளிக்கலாயிற்று.

இவ்வாண்டுகளின் நிகழ்ச்சிவரலாறுகள் கீழே குறிக்கப்படுகின்றன. சங்கவாண்டுகளை இனித் தைத்திங்கள் முதல் தொடங்குவது பல்லாற்றானும் நலமாயிருக்குமெனச் சங்கத்தாரிட்ட கட்டளையின்மீது, சங்கத்தின் எட்டாவதாண்டாகிய காலயுத்தியில் சித்திரைத் திங்கள் முதல் மார்கழித் திங்கள் ஈறாக வுள்ள முக்கால் ஆண்டின் நிகழ்ச்சிகளை சங்கத்தின் எட்டாவது அறிக்கையாகக் கீழே காட்டப்படுகின்றன.

## ஆறாவது ஆண்டுத் திருவிழா.

இச் சங்கத்தின் ஆறாவது ஆண்டுத் திருவிழா பிங்களவாண்டு ஆனித் திங்கள் ௯, ௰-வது நாட்களில் (23, 24—6—1917), சென்னைப் பச்சையப்பர் கல்லூரித் தமிழ்ப் பெருங்கணக்காயர் (Professor) திரு. தி. செல்வக்கேசவராய முதலியார், எம். ஏ., அவர்களது தலைமையில் மிகச் சிறப்பாக நடந்தேறியது. தலைவரவர்கள் வழக்கம் போலவே பல்லியம் முழங்கத் திருவோலக்கத்துடன் ஊர்வலம் வந்து, 'கிருஷ்ண விலாசம்' என்னும் பந்தரில் எள்ளிட இடமின்றிப் புலவரும், பிறரும் குழீஇய பேரவையின்கண், யாவரும், 'வாழ்க நம் தமிழ்த் தாய்! வாழ்க நம் தலைவர்! வாழ்க நம் அரசர்! வாழ்க நல் லுலகம்!' என வாழ்த்துக் கூற, முதன்மை தாங்கித் திருவிழாவை யாவரும் வியக்க மிக அழகாக நடத்தினார்கள். அவர்கள், தங்கட்கு இயற்கையிலேயே நம் அருந் தமிழன்னையிடம் உள்ள உழுவலன்பு மேலிட்டால், நம் உயர்தனிச் செம்மொழி கணக்கிடலாகா மிகப் பழங் காலந் தொட்டே சீருஞ் சிறப்பு முற்றுள்ளதென்றும்; இதன் உயர் தனித் தன்மையினாலேயே இடையிடையே நேர்ந்த பற்பல ஊறுகளுக்குந் தப்பி, மேன்மேலும் வளர்ந்து வருகிறதென்றும்; இதனைச் சங்கங்களும், புலவர்களும், பெருஞ்செல்வர்களும் மேன்மேலும் போற்றிப், புரவலித்து வளர்க்க வேண்டுமென்றும்; அங்ஙனம் வளர்த்தலே அவர்களது முதற்கடமையாகுமென்றும்; வற்புறுத்திக் கூறிய இனிய மொழிகள் யாவர் உள்ளத்தினையும் களிப்புறச் செய்தன. அவர்களது உண்மைத் தமிழன்பையும், ஊக்கத்தினையும் வியந்து பாராட்டி அவர்கள் எம்மிடத்து வைத்துள்ள பேரருளுக்காகவும், இச்சங்கத்தின் மேம்பாடு கருதி அவர்கள் எமக்கு அறிவுறுத்திய உறுதிமொழிகளுக்காகவும், யாம் அவர்களிடத்து மிகுதியும் நன்றி பாராட்டுகின்றோம்.

நிற்க, நளவாண்டறிக்கை படிக்கப்பட்டவுடன் ஆண்டுக் குழுவினரால் கீழ்க்கண்ட முடிவுகள் (Resolutions) செய்யப்பட்டன:—

க. தஞ்சாவூர், கரந்தட்டாங்குடி, கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஆறாவது ஆண்டுத் திருவிழாத் திருநாளிற் கூடிய உயர்தனிப்பழங்குடி வழிவந்த தமிழரெல்லாம், சர்மானியர் முதலிய எதிரிகள் அருள் சிறிது மில்லாது, தந்நலமே கருதிக், கொடும் போர்தொடங்கிக், கருணைத்திறத்தின் மேம்பட்ட யிகுமாட்சி தங்கிய ஜார்ஜ் மன்னர் மன்னவர் முதலிய நேசக்கட்சியாருடன் செய்துவரும் போரில், நேசக்கட்சியார் விரைவில் வெற்றிபெற்று, உலகம் நலம்பெற வேண்டுமென்று, மேலான பெருங்கருணை யாளனாகிய எல்லாம் வல்ல இறைவன் திருவடிக் கமலங்களை நினைந்து, வாழ்த்தி, வணங்குவோமாக.

இது தலைவர் அவர்களால் முன்மொழியப்பட்டு, மாட்சிமிக்க சென்னை ஆட்சிக்கிழவர் (Governor) அவர்களுக்கு அனுப்பப்பட்டது.

உ. பழமை பெருமைகளிற் சிறந்த நம் தமிழ் மொழி வழங்கும் தமிழகத்தில், இத்தஞ்சை மன்னரால் அறத்திற்கென்று அளிக்கப்பட்டிருக்கும் பொருளின் பயனைக் கல்விநெறியில் தமிழர்கள் அடையுமாறு இளைஞர்களின் கல்விப் பயிற்சிக்கு வேண்டியாங்குதவவும், திருவையாறு வடமொழிக்கல்லூரியில் தமிழையும் முதன்மைப்பாடமாக வைத்து நடத்தவும், இன்னும் அக்கல்லூரி

யை இச்சில்லாவின் தலைநகராகிய தஞ்சையில் வைத்து நடத்தவும் தஞ்சாவூர் சில்லா இறைதண்டற்றலைவர் (Collector) அவர்களுக்கும், நாட்டாண்மைக் கழகத்தார்க்கும் (District Board) விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும்.

இது, திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பீ. ஏ., பீ. எல்., அவர்களால் முன்மொழியப்பெற்று, திரு. த. பீ. சோமநாத ராவ் அவர்களால் வழிமொழியப்பெற்றுத், தஞ்சை மன்னர் அறப்பொருள்பாலிக்கும் தஞ்சை நாட்டாண்மைக் கழகத்தலைவர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளப்பட்டது. இதன்மேல் அவர்கள் இப்பொருண்மையைப்பற்றி இப்பொழுது கருத முடியாதென்று விடையளித்திருப்பதற்கு உள்ளங்கவன்று, மேல் ஆகவேண்டியவற்றை எண்ணித் துணியும் பொருட்டுத் தமிழர்களுக்கெல்லாம் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

௩. தமிழ் நாட்டு மடங்களின் தலைவர்கள் தம் கடமையாகிய தமிழ் வளர்ச்சியில் மிகுந்த எண்ணங்கொண்டனராகித், தமிழ்ச்சங்கங்களுக்குப் பொருள் முதலிய உதவிகளைப் புரிந்து, தமிழை வளர்த்து வருமாறு அவர்களைக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

இது திரு. வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார், எவ். டீ. எஸ்., ஓ. எஸ். ஈ., அவர்களால் முன் மொழியப்பெற்று, திரு. ஐ. குமாரசாமி பிள்ளை, பீ. ஏ., அவர்களால் வழிமொழியப்பெற்று, திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாளாதிய மடங்களின் தலைவர் திருமுன் விண்ணப்பித்துக் கொள்ளப்பட்டது. இது காறும் அருண்மொழியொன்றுங் கேட்டிலம்.

௪. தமிழ்ப்பெரும் புலவர்களின் பெருமைகளையும், அவர்கள் தமிழகத்துக்குச் செய்துபோந்த உதவிகளையும் நினைவுகூர்ந்து ஒவ்வொரு தமிழ்ச் சங்கமும் ஆண்டுகள்தோறும் அவர்கட்குத் திருவிழாக் கொண்டாடி வரவேண்டும்.

இது திரு. எம். எஸ். கலியாணசுந்தரமையர் அவர்களால் முன்மொழியப்பெற்று, கும்பகோணம் திரு. ஆ. வேங்கடராம ஐயங்கார் அவர்களால் வழிமொழியப்பெற்று, தமிழ்ச்சங்கங்களுக்கும், தமிழ்ப் புலவர்களுக்கும் அவர்களது கருத்துரை வேண்டி அனுப்பப்பட்டது. பல சங்கங்களிடமிருந்தும், புலவர்களிடமிருந்தும் வரப்பெற்ற மறுமொழிகளிலிருந்து கீழ்க்கண்ட கருத்துக்களைத் தமிழராது மேலாய்விற்குக் கொண்டுவருகின்றோம்.

ஒவ்வொரு புலவருக்கும் திருவிழாச் செய்ய நன்னாளையும், முறையையும் உறுதிப்படுத்திக் கொள்ளுதல் எளிதன்றாயினும், கீழே காட்டியபடி ஒருவாறு குறிக்கலாம். சமயக் கோட்பாட்டினாலும், பொதுக்கொள்கையாலும் குறிக்கப்பெற்ற பெரியார்கட்கு முன்னரே வகுக்கப்பெற்ற நாட்களிலும், பிற புலவர்கட்குக் கற்றோராலாய்ந்து முடிவு செய்யப்பெற்ற நாட்களிலும், அவ்வப்பெரியார்களது வாழ்க்கை வரலாறுகளையும், நூல் நுட்பங்களையும், அவர்கள் வாழ்ந்த ஊர், காலம் முதலியவற்றையும், சிறந்த புலவர்களைக்கொண்டு காய்தலுவத்தலகற்றி ஆய்ந்த சொற்பொழிவாற்றியும்; உயரிய ஆராய்ச்சி வரைவோர்க்குத் தக்க பரிசளித்தூக்கியும்; அவ்வாராய்ச்சிகளை வெளியிட்டும்; தமிழ்ப் பெரும்புலவர்களை நினைவு கூரலாம். சொற்கோ, ஆளுடையபிள்ளை, முதலிய சைவப்பெரியார்கட்கும், மாறன்,

ஆண்டாள் முதலிய வைணவப் பெரியார்கட்கும் சமயக் கோட்பாடு கருதிச் சமயத்தார்களும், மொழிவல மேம்பாடு பற்றித் தமிழ்க் கழகங்களும் விழாச் செய்தல் முறையாகும். திருத்தக்கதேவர், சாத்தனார் முதலிய சமண, பௌத்தப்பெரியார்கட்கும், மஸ்தான் முதலிய மகம்மதியப்பெரியார்கட்கும், வீரமாமுனிவர், போப்பையர் முதலிய கிறிஸ்தவப் பெரியார்கட்கும் அங்ஙனமே அவ்வச்சமயத்தார்களும், தமிழ்ச் சங்கங்களும் புரிதல் முறையாகும். தொல்காப்பியருள்ளிட்ட முச்சங்கப் புலவர்கட்கும் ஒரு நாள்கொண்டு சங்க நூல்களை ஆராய்ந்து, விளக்கி, மகிழ்ந்தும்; எச்சமயத்தாரும் போற்றும் திருவள்ளுவனார்க்கு மாசித்திங்கள் உத்தரநாளில் விழாக் கொண்டாடி, அவரருளிய ஒப்புயர் வில்லாப் பொதுமறையை உயரிய முறையில் அழகுபெற வெளியிட்டுக், கல்வி கற்கும் மாணவர்கட்குப் பரிசளித்துப் பரவச் செய்தும் வரவேண்டும். நடுக்காலப் புலவர்களில் பெரும்பேர் வாய்ந்த சேக்கிழாருக்கும், கம்பருக்கும், யாரும் விழாச் செய்யலாம். கம்பருக்கு அவர் நூலரங்கேறிய பங்குனி யத்த நாளில், அவர் பிறந்த திருவழுந்தூரிலும், நூலரங்கேறிய திருவரங்கத்திலும், எழாத்துயில்கொள் நாட்டரசன் கோட்டையிலும் முறையே ஆண்டுதோறும் மாறிமாறி விழாச் செய்தல் வேண்டும். திருவழுந்தூரிலுள்ள கம்பமேட்டில் கம்பர்மன்றம் ஒன்று கட்டுவித்து, ஆண்டுக் கம்பர்கழகம் ஒன்றுண்டாக்கி, அவரது நூல்களை ஆராய்ச்சி செய்து, வையத்தாரை மகிழ்வித்தல் இன்றியமையாதது. திருவரங்கத்திலுள்ள கம்பர் திருவுருவத்தைப் போற்றிக் காப்பாற்றவேண்டும். நாட்டரசன் கோட்டையில் கம்பர்க்கு நடுகல நாட்டவேண்டும். மற்றப் புலவர்களுக்கு அவர்கள் வாழ்ந்த ஊர்களில் கழகங்களேற்படுத்தி, அவர்கள் நூல்களை ஆராய்ச்சி செய்து, நன்னாள்கொண்டு விழாச்செய்து, அவர்கள் வரலாறுகளை வெளியிடுதல் அவ்வப்பக்கத்தாரது கடமையாகும். எடுத்துக் காட்டாகப் பரஞ்சோதியார், ஒட்டக்கூத்தர், அருணகிரியார்க்கு முறையே மடப்புரம், சீகாழி, திருவண்ணாமலைகளில் விழாக் கொண்டாடலாம். மடங்களினின்று வெளிவந்த புலவர்களுக்கு அவ்வம்மடங்களில் விழாச்செய்து அவர்கள் நூல்களை வெளியிடல் வேண்டும். சிவஞானமுனிவர் முதலியோர்கட்குத் திருவாவடுதுறையிலும், குமரகுருபராதியோர்க்குத் தருமபுரத்திலும் விழாச்செய்தல் இயையும் இவ்வளவில் ஆரம்பித்து, இனி இயல்பிற்கும் ஊக்கத்திற்கும் தகுதியாக வேண்டுழிப் பெருக்கிக்கொள்ளலாம். இவ்வாறு பற்பல கழகங்களும், ஊரார்களும் செய்யும் முயற்சிகள் உண்மைத் தமிழருக்கு மகிழ்ச்சி உண்டாக்குவனவாம். இம்முயற்சிகளே மொழி வளர்ச்சிக்கும், தமிழர் மேம்பாட்டுக்கும் அடிப்படையாகும்.

மேற்குறித்த முடிவுகள் செய்யப்பட்டபின், கீழ்க்கண்ட சொற்பொழிவுகள் (Lectures) நடைபெற்றன.

க. கல்வியும், அதன் பயனும்—திரு. சுவாமி சகசானந்தர் அவர்கள், சிதம்பரம்.

உ. தமிழ் மொழியின் முற்கால தற்கால நிலைமை—திரு. அ. வரத நஞ்சைய பிள்ளை அவர்கள், சலகண்டபுரம்.

ங. முற்கால இந்தப் பெண்களின் நிலைமை—திரு எம். எஸ். கலியாண சுந்தரமையர் அவர்கள், கரந்தை.

ச. தமிழ் மொழி பேணுதல் இன்றியமையாதது—திரு. ஆ. வேங்கடராம ஐயங்கார் அவர்கள், கும்பகோணம்.

௫. தமிழ் ஓர் உயர்தனிச் செம்மொழியே—திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், எம். ஏ., எம். எல்., சென்னை.

௬. தமிழ்த் தொண்டர்—திரு. ம. ரா குமாரசாமி பிள்ளை அவர்கள், திருக்கோவலூர்.

௭. கம்ப ராமாயணம்—திரு. அ. வரத நஞ்சைய பிள்ளை அவர்கள், சலகண்டபுரம்.

எம்பாற் பேரன்பு கொண்டு, எம் வேண்டுகோட்கிணங்கித் தாம் நுண்ணிதி னுய்ந்து கண்ட அரிய பொருள்களைத் தமிழ் வையம் பயனுறக் கூறி மகிழ்ந்து, சங்கத்தைச் சிறப்பித்த மேற்குறித்த போறிஞர்க்கு யாம் மிகுயும் நன்றி பாராட்டுகின்றோம். மகிபாலன்பட்டி, திரு. பண்டிதர் மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் எம் வேண்டுகோட் கிசைந்து, 'சிலப்பதிகார வாராய்ச்சி' என்ற பொருள் பற்றிச் சொற்பொழிவாற்ற எழுந்தருளியிருந்தார்களாயினும், வந்த இடத்தில் பிணியுற்றதனால், அவர்களது இனிய சொற்பொழிவைக்கேட்க ஆவலோடு எதிர்பார்த்திருந்தவர்களுக்கெல்லாம் ஏமாற்றம் உண்டாய தோடன்றி, எமக்கு ஆற்றொணாத் துயரமும் உண்டாயது. பண்டிதரவர்கள் தமக்கவ்விடையுற்ற பிணியையுங் கருதாது சொற்பொழி வாற்ற முந்தினார்களாயினும், அவர்களது வருத்தங்காணவாற்றாது, அவர்களது சொற்பொழிவை விட்டு விடும்படி வேண்டிக்கொள்ள நேர்ந்தது. பண்டிதரவர்கள் பிணியற்ற வல்லுடம்புடன் நீடூழி வாழ்ந்து, தமிழை வளமுறச் செய்துவர எல்லாம் வல்ல இறைவன் திருவருளை உன்னுகின்றோம்.

**உறுப்பினர்.**

நளவாண்டினிறுதியில் நூற்றுத்தொண்ணூற்றொன்பது உறுப்பினர் இருந்தார்கள். இப்பால் சேர்ந்தார், பிங்கள வாண்டில் இருபத்தொன்பதின்மர்; காலயுத்தியிற் பதின்மர். சங்கத்தினின்றும் விலகிக்கொண்டார், பிங்களத்திற் பதினைவர்; காலயுத்தியில் எழுவர். இறைவன் திருவடி நீழலெய்திய வருளாளர்கள் ஏழாவதாண்டில் மூவர்; எட்டாவதாண்டில் மூவர். எனவே, இப்பொழுது உறுப்பினராகவுள்ளார் இருநூற்றுப்பதின்மர். (சேர்க்கை-௧)

**கூட்டங்கள்.**

பிங்கள வாண்டில் உறுப்பினர் தொழிற் சூழ்ச்சிக்கூட்டம் இரண்டும்; தொழிற்கழகத்தார் கூட்டம் பதினொன்றும், பொதுக் கூட்டம் எட்டும்; காலயுத்தியாண்டில் தொழிற் கழகத்தார் கூட்டம் ஒன்பதும், பொதுக் கூட்டம் ஒன்பதும் நிகழ்ந்தன.

## பொதுக் கூட்டங்களின் நிரல்

### பிங்களவாண்டு

*தஞ்சை.*

௧. ஆவணித் ௰௨ (26-8-1917)—சிலப்பதிகாரம்—திரு ஆர். வேங்கடாசலம் பிள்ளை அவர்கள். தலைவர்—பண்டிதர் திரு. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்.

௨. புரட்டாசித் அ௨ (23-9-1917)—பெரியபுராண ஆராய்ச்சி—திரு. சி. சோமசுந்தர முதலியார் அவர்கள். ஆத்திசூடி—திரு.

வீ. நாராயணசாமி பிள்ளை அவர்கள். தலைவர்—பண்டிதர் திரு. எல். உலகநாத பிள்ளை அவர்கள்.

௬. மார்கழிீ உ௩௨ (6-1-1918)—சிந்தாமணி அகமும் புறமும்— பண்டிதர் திரு. சிங்காரவேலு முதலியார் அவர்கள்.

௭. தைமீ ௰௪௨(27-1-1918)—கம்பராமாயணம்-திரு. நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள். தலைவர்—திரு. த. சு. சபாபதி பிள்ளை அவர்கள், பீ. ஏ.

௫. மாசிமீ ௰௬௨ (27-2-1918)—திருவள்ளுவனார் திருநாள் விழா—தலைவர்—இராவ்பகதூர் திரு. மு. ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.

௬. பங்குனிமீ க௨ (14-3-1918)—திரு. வே. இராதாகிருட்டின பிள்ளை, பீ. ஏ., அவர்களின் பெரும்பிரிதழுங்கல். தலைவர்—இராவ்பகதூர் திரு. மு. ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.

திருச்சிராப்பள்ளி.

எ. ஐப்பசிமீ ௬௨ (21-10-1917)—தமிழெழுத்தின் ஒப்புயர்வில்லா ஒலிமாட்சியும், அதனை வெளியிடுங் கடமையும்—திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள், பீ. ஈ., எம். சீ. ஐ. தலைவர்—பண்டிதர் திரு. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்.

அ. கார்த்திகைமீ உ௬௨ (11-12-1917)—மணிமேகலை ஆராய்ச்சி—பண்டிதர் திரு. மு. கதிரேசன் செட்டியார் அவர்கள். தலைவர்—திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள், பீ. ஈ., எம். சீ. ஐ.

---

காலயுத்தி ஆண்டு

---

தஞ்சை.

௯. சித்திரைமீ க௨ (13-4-1918)—நமது கடமை—திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள், பீ. ஏ., பீ. எல். காலத்தினருமை—திரு. நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள். தலைவர்—பண்டிதர் திரு. சிங்காரவேலு முதலியார் அவர்கள்.

௰, ௰௧. வைகாசிமீ ௫, ௬௨ (18, 19-5-1918)—உயர்தனித் தமிழ் மொழியின் ஒலிமாண்பு—திரு பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள். பீ. ஈ., எம். சீ. ஐ. தலைவர்—இராவ்பகதூர் திரு. மு. ஆறுமுகப்பிள்ளை அவர்கள்.

௰௨. ஆவணிமீ உ௩௨ (14-9-1918)—கம்பர் கவிநயம்—திரு. பா. வே. பொன்னுச்சாமி நாயக்கர் அவர்கள், சேலம்.

௰௩. ஐப்பசிமீ ௩௰௨ (15-11-1918)—நாயன்மார்கள் சரிதம்—திரு. வி. சே. ஆறுமுக முதலியார் அவர்கள், பெங்களூர்.

௰௪—௰எ. மார்கழிமீ ௰அ—உ௩௨(1-4—1-1919) கம்பராமாயணம்—பண்டிதர் திரு. கா. ஸ்ரீ. கோபாலாசாரியார் அவர்கள், சென்னை. தலைவர்—திரு. சிவஞானம் பிள்ளை அவர்கள்.

## நூல்நிலையம் (Library).

• நளவாண்டினிறுதியில் இந்நிலையத்தில் ௭௨௮ (728) சுவடிகள் இருந்தன. பின்னர் விலைக்கு வாங்கியனவும், நன்கொடை வந்தனவுமாகப், பிங்களவாண்டில் நூறு சுவடிகளும், காலயுத்தியில் நூற்றொரு சுவடிகளும் சேர்ந்தன. (சேர்க்கை—௨). ஆக இப்பொழுது நிலையத்திலிருப்பன ௯௨௯ (929) சுவடிகளாகும்.

## செந்தமிழ்க் கைத்தொழிற் கல்லூரி.

செந்தமிழ் பரந்தோங்கிக் கைத்தொழிலும் சிறத்தற்கு அடிப்படையாகவுள்ள நம் சங்கத்தைச் சார்ந்த தொடக்கக் கல்விக் கழகத்தில் நளவாண்டினிறுதியில் நாற்பத்தொரு பிள்ளைகள் படித்து வந்தார்கள். பிங்கள வாண்டில் அறுபத்தைந்து பிள்ளைகள் சேர்ந்தார்கள். நாற்பத்திரண்டு பிள்ளைகள் நீங்கினார்கள். காலயுத்தியில் நாற்பத்தொரு பிள்ளைகள் சேர்ந்தார்கள். நாற்பத்து நான்கு பிள்ளைகள் நீங்கினார்கள். எனவே, இப்பொழுது அறுபத்தொரு பிள்ளைகள் படித்து வருகிறார்கள். இக் கழக வினைஞரது ஊக்கத்தினாலும் முயற்சியினாலும் இக்கழகம் பொழுதொரு வண்ணமாக வளர்ந்து வருகின்றது.

## இலவசப் படிப்பிடம்.

நம் சங்கத்தைச் சார்ந்து யாவர்க்கும் நன்கு பயன்பட்டு வருகிற இப் படிப்பிடத்திற்கு, ௧. சுதேசமித்திரன், ௨. திராவிடன், நாட்பதிப்புக்களும்; ௩. ஞானசாகரம், ௪. தமிழன், ௫. நல்லாசிரியன், ௬. விவேக சிந்தாமணி ௭. மனோரஞ்சனி, ௮. Mysore Economic Journal என்ற திங்கட்டாள்களும்; வரவழைக்கப் படுகின்றன இவையன்றி, நம் தலைவரவர்களால் ௯. Justice நாட்பதிப்பும்; ௰. சித்தாந்தம், ௰௧. கிருஷிகன், ௰௨. Mysore University Magazine, ௰௩. Fergusson College Magazine என்ற திங்கட்டாள்களும்; மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் ௰௪. செந்தமிழும் உதவப்பெற்று வருகின்றன.

## கல்விக்காகப் பொருளுதவி.

சங்கத்திலிருந்து தம் படிப்பிற்குப் பொருளுதவி பெற்று வந்த திரு. கோ. அமிர்தலிங்கம் என்னும் மாணவர், மேலே தம் படிப்பை நிறைவேற்றத் தம் இன்னிலை இடந்தராமையின், பிங்கள வாண்டில் சில திங்களில் தம் பள்ளிப்படிப்பையும், அதற்காக உதவி பெறுதலையும் நிறுத்திக்கொண்டனர்.

## கிளைச்சங்கம்.

நம் திரிசிரபுரம் கிளைச்சங்கம் முன்னையினும் மிகுதியாகச் சங்க நோக்கங்களை முற்றுவிக்க முயற்சி செய்து வருதல் எமக்குப் பெரு மகிழ்வைத் தருகின்றது. திரிசிரபுரம் உறுப்பினருக்கும், முக்கியமாக, அவர்களை ஊக்கப் படுத்திப் பலவகைகளிலும் அவர்களைப் பயிற்றித் தேற்றி மகிழ்வாரும், எம்மாட்டு உழுவலன்புடையாருமாகிய பண்டிதர் திரு. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களுக்கும் எம் என்றும் மறவா நன்றியைத்தெரிவித்துக் கொள்ளுவதோடு, இன்னும் மேன்மேலும் நம் சங்கமேம்பாட்டுக்

காகவும், நம்மருமைத் தமிழ்த்தாயின் சிறப்புக்காகவும் முயற்சிக்குமாறு கிளையுறுப்பினரையெல்லாம் வேண்டுகின்றோம்.

இக்கிளை முயற்சி நலங்களை இதன் மூன்றாவது சேர்க்கையிற் காண்க.

வருவாய்.

வழக்கம் போலவே நம் சங்க உறுப்பினரும், பிறரும் சங்க முயற்சிகளில் உள்ளப் பற்றும், ஊக்கமுங் காட்டிவருவதோடு, தத்தமாலியன்ற பொருளுதவியும் செய்து வருகின்றனர். இவ்விரண்டு ஆண்டுகளின் வரவு செலவுகள் பின்னர்க் காட்டப் படுகின்றன (சேர்க்கை—௪.)

தமிழன்பர்கள் தம் இல்லங்களில் நடைபெறும் வாழ்க்கை நல நேர்ச்சிகளில் தமிழம்மையைப் போற்றும் வழக்கம் மிகுந்து வருகின்றது. இங்ஙனம் செய்தார் நிரல் வருமாறு.

பிங்கல.

திரு. ஆர். அருணாசலம் பிள்ளை அவர்கள், திரிசிரபுரம்—உடன்பிறந்தார் திருமணம்—ரூ 40.
,, க. அண்ணாமலைப் பிள்ளை அவர்கள், ஆலங்குடி—திருமணம்—ரூ 10.
,, பொ. சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள், கூடலூர்—மகன் திருமணம்—ரூ 10.
,, க. இராமசாமி பிள்ளை அவர்கள், கரந்தை—திருமணம்—ரூ 10.
,, ஆர். கிருஷ்ணசாமி பிள்ளை அவர்கள், திரிசிரபுரம்—மகப்பேறு—அணா 8.
,, அ. கணபதிப் பிள்ளை அவர்கள், திரிசிரபுரம்—மக்கள் காதணி மங்கலம்—ரூ 10
,, ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், கரந்தை—அன்னையார் திதி—அணா. 4.
,, அ. கணபதிப்பிள்ளை அவர்கள், திரிசிரபுரம்—அன்னையார் திதி—ரூ. 1.
,, ஆர். சிவகடாக்ஷம் பிள்ளை அவர்கள், இடைக்கியம்—தந்தையார் திதி—ரூ 2.
,, நா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், திரிசிரபுரம்—தந்தையார் திதி—அணா 4.

காலயுக்தி.

,, அப்பாவுப்பிள்ளை அவர்கள், பூண்டி—மக்கள் காதணி மங்கலம்—ரூ 5.
,, ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், கரந்தை—அன்னையார் திதி—அணா. 4.
,, ஆர். வேங்கடாசலம் பிள்ளை அவர்கள், மேகனூர்—தந்தையார் திதி—அணா 8.

இக் கரந்தை வணிகர்கள் வழக்கம் போலவே உண்டிகைத் தருமம் செய்துவருகின்றார்கள். இக்கரந்தைக் கிழார்களிற் பலர் பிடியரிசி தந்துதவுகிறார்கள். அன்றியும், தமிழரது கல்வி வளர்ச்சிக்காகப் பொருள் எற்கும் பொருட்டு நாலணா மதிப்புள்ள 1,00,000 சீட்டுகள் வெளியிடப்பட்டிருக்கின்றன. தமிழ், தமிழரது முன்னேற்றத்திற் குறியுள்ளபெருமக்கள் இவையிற்றைப்பெற்றுதவுவார்களாக.

## மதிப்புரை.

தஞ்சைப், பண்டிதர் திரு. எல். உலகநாத பிள்ளை அவர்கள், தாம் எழுதிய 'கன்றுங் கனியுதவும்' என்னும் நூலைப்பற்றிச் சங்கத்தின் மதிப்புரை வேண்டினார்கள். அதற்கியைய அந்நூல் ஆராயப்பட்டு, ஓரமற்ற மதிப்புரை கொடுக்கப்பட்டது. அங்ஙனமே மதிப்புரை வேண்டிக் கும்பகோணம் பண்டிதர் திரு. ஊ. சா. வேங்கடராம ஐயர் அவர்கள் எழுதி அனுப்பிய 'அரிச்சந்திரன்' என்னும் உரைநூல் ஆராய்ச்சியிலிருக்கிறது.

## கையறு நிலை.

இவ்வாண்டுகளில் நம் தமிழன்னைக்கு ஆற்றொணாத் துயர்பல நேர்ந்தன. தமிழன்பு புறங்காட்டி, உள்ளொன்று வைத்துச் சில குழுஉக்களும், மக்களும், தமிழ் நலங்கருதாது, தம் நலங்குறித்து, நம் அன்னைக்கு இன்னலே விளைத்து இன்புறுதலைக் கண்டு, உளம்பதைத்தெழுந்து, உண்மை நற்றொண்டால், அயர்வுறு அன்னை தன் தொல்லுயர்நிலை யுற, உலகுளங்குளிர, சில வழுக்காறுற்ற சிறியவ ரழுங்கினும் அரிதெனவியக்க, கலைபலவிரியக், கரந்தைத் தமிழ்ச் சங்கம் கண்ட எம் கருத்துளான்; கல்வியிற் சிறந்த கலங்கா நெஞ்சன்; திண்ணிய உளத்தொடு எண்ணியது முடிக்கும் புண்ணியன்; போலித்தமிழர் புகல்வகை யெள்ளிய புலவன்; கருத்தொருமித்த காதன் மனையொடுந் தாய்க்கடனாற்றலே தகுதியென்றோர்ந்து, மனையும் தானும் மாண்புறு சங்கஉறுப்பினராகி உழைத்தவொருவன்; திரு. வே. இராதாகிருட்டின பிள்ளை என்னுந்திருவன், தாய்க்கடனாற்றி வருநாளில், இளங்குழவித்தமிழ்ச்சங்கம் தாயிழந்தலமந்தலறும் இளங்கன்றெனப்பதறவும்; கொழுகொம்பிழந்த கொடியெனக், கொழுநனையிழந்த எம் தங்கையார் கொடிதழுங்கவும்; 'உடற்பிறப்பாற்றோன்வலிபோம்' என்றபடி எம் தலைவர்தம்முழுவலி கெட்டலமரவும்; யாமெல்லாம் படைத்தலைவனையிழந்து, தமிழ்ப் பகைவரையஞ்சித் தடுமாறவும் விட்டு உருக்கரந்தனர். தமிழ்த்தாய் தன் தலைமகனைப் பறிகொடுத்தமைக்கு வருந்துவேமா? எங்கையார் இரங்கு நிலைக்கு வெம்புவேமா? எம் தலைவர் இன்னலுக்குக்கன்றுவேமா? எம் சங்கமங்குதலுக்குத் துயர் பொங்குவேமா? எவ்வழிப்பார்க்கினும் இன்னலின்றிப் பின்னையொன்றுங் கண்டிலம். அந்தோ! இறைவன் திருவருளிருந்தவாறென்னே? 'எம் செயலாவது யாதொன்றுமில்லை. இனித், தெய்வமே! உன் செயலென்றே உணரப்பெற்றேம்' செயக்கிடப்பதென்? பிள்ளையவர்களை அடிக்கடி நினைதற்கான எற்பாடுகளைச்செய்து, அங்ஙனம் நினைவுகூர்ந்து, அவர்கள் காட்டிவைத்த வழிகளில், அவர்கள் வகுத்த முறைகளைக் கடைப்பிடித்து, முன்னையினும் மிகுதியாகத் தமிழன்னைக்கு அன்புடன் தொண்டு புரிந்தொழுகுதலே பிள்ளையவர்களின் வழியொழுகுவேமாகிய எம் தலைக்கடன் என்பதை யாம் உண்மையா வுணர்கின்றோம்.

இன்னும், இவ்வாண்டுகளில் நம் சங்க உறுப்பினர்களாகிய, கரந்தை திரு. பொ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், சிதம்பரம், திரு. கா. ழந்

தைய செட்டியார் அவர்கள், பனையூர், திரு. அ. சாமிநாத முதலியார் அவர்கள், நீடாமங்கலம், திரு. நடேச செட்டியார் அவர்கள், தஞ்சை, திரு. டி. கே. சுப்பையா நாயுடு அவர்கள், காலஞ்சென்ற செய்தி கேட்டுத், துன்புற்று, எம் வலிக்குறைவிற்கு வருந்துதலோடு, அவரவர்கள் குடும்பத்தார்க்கும், அவரோடு யாமும் உடனிரங்குதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இன்னும், நம் சங்கத்திடத்து மிக்க பரிவுகொண்டு, எமக்கு வேண்டும் போதெல்லாம் வேண்டிய இன்மொழி யுதவி, எம்மோடு உளமொத்து, அளவளாவி, எம்மை ஊக்கிவந்த அறிஞர் திரு. ஐ. சாமிநாத முதலியார் அவர்களது மறைவு எமக்குப் பெரிதும் துயருண்டாக்குகின்றது. இன்னும், தமிழ்ப்புலவர்களாகிய சென்னை, சிவ. திரு. கலியாணசுந்தர யதீந்திர சுவாமிகள், யாழ்ப்பாணம், திரு. வீ. ஜே. தம்பிப்பிள்ளை அவர்கள், திரு. ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை அவர்கள், கும்பகோணம், திரு. ஆ. வேங்கடராம ஐயங்கார் அவர்கள் ஆயினோரும், சங்கத்திடத்து அன்பு பூண்டிருந்த சென்னைச் சாக்ஸ்டன் அச்சுக்கூடத்தலைவர் திரு. கண்ணையா நாயுடு அவர்களும் காலஞ்சென்ற செய்திகேட்டு வருந்துகிறோம்.

இம்மட்டோ? 'பட்டகாலிலேபடும்' என்றபடி எமக்கு மேன்மேலும் துயர் விளைந்தது. இடம் உதவுவேம், இடம் உதவுவேம்? எனப்பலரும் எமக்குச் சொல்லளித்து வந்துகொண்டிருப்பினும், எம் இடக்குறை அகலாதிருப்ப, எம் வருத்தம் நோக்கி, இருபெரு மாளிகைகளை உதவியதன்றி, நம் சங்கத்திற் கெழுந்தருளி, இதன் நன் முயற்சிகளைக் கண்டுமகிழ்ந்து, அவை வளம் பெறுதற் பொருட்டாக ஆண்டுதோறும் இருபத்தைந்து ரூபா உதவுவதாகச்சொல்லி, அவ்வாறே உதவிவந்த தருமாவரம் இறைதண்டற்றலைவர்த் துணையார் (Deputy Collector) திரு. டி. என். வேங்கடசாமி நாயுடு, பி. ஏ., அவர்களும், நம்சங்க நான்காவதாண்டுத் திருவிழாவில் தலைமை கொண்டு, சங்கத்திற்குப் பேருதவி புரிவதாகச் சொல்லளித்திருந்த தீவான் பகதூர் திரு. சா. ராம. மு. இராமசாமிச் செட்டியார் அவர்களும் எம் தீவினை வயத்தால் காலஞ்சென்ற செய்திகேட்டு யாம் ஆற்றொணாத்துயருறுகின்றோம். புரப்பாரற்றுத் தத்தளிக்கும் தமிழ்த்தாய்க்குக் 'கைக்கெட்டியது வாய்க்கெட்டாது போவ' தொப்ப, இன்னல்மேல் இன்னலுறுவது, அம்மம்ம! கொடுமை! கொடுமை!! நேரியநடையும், சீரியகுணமும், இளைத்த சுற்றங்களை உசாவித்தழுவிய சிறப்பும்உடைய நாயுடு அவர்கள் பிரிவு எம்மாலும், அவர் தம் சுற்றத்தாலும் ஆற்றொணாதது.

பார்வையிட்டோர்.

இவ்வாண்டுகளில் அடியிற்குறித்த பெரியோர்கள் சங்கத்திற்கு எழுந்தருளிச், சங்க வளர்ச்சிக்கான நுட்பங்களைச் சொல்லியுதவி, எம்மை மகிழ்வித்தார்கள். யாம் அவர்களுடைய பற்றுள்ளத்தைப் பாராட்டி, அவர்களிடத்தில் மிகுதியும் நன்றியுணர்கின்றோம்.

க. திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், எம். ஏ., எம். எல்., சென்னை.

உ. திரு. தி. செல்வக்கேசவராய முதலியார் அவர்கள், எம். ஏ., தமிழ்ப்பெருங்கணக்காயர், பச்சையப்பர் கல்லூரி, சென்னை.

௩. திரு. டி. கே. வேங்கடாசல ஐயர் அவர்கள், பீ. ஏ., பீ. எல்., (சில்லா முன்சீப்) தஞ்சை.

௪. திரு. சீ. டீ. இராம ராவ் அவர்கள், எம். டீ., (சில்லா மருத்துவர்) தஞ்சை.

௫. திவான்பகதூர் திரு. டீ. என். சிவசுப்பிரமணிய தீர்த்தபதி அவர்கள், சிங்கம்பட்டிச் சமீன்தார்.

௬. திரு. பீ. நெல்லையப்ப பிள்ளை அவர்கள், பீ. ஏ., பீ. எல்., திருநெல்வேலி.

௭. திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள், பீ. ஈ., எம். சீ. ஐ., சென்னை.

௮. திரு. ஜே. ஆர். சிண்டே அவர்கள் இந்தியாத் தாழ்ந்த வகுப்பினரை யுயர்த்தற் றொழிற் கழகப் பொதுவமைச்சர் (General Secretary, Depressed Classes Mission Society of India) பம்பாய்.

௯. திரு. கே. ஜீ. பேட்டடே அவர்கள், மேற்கூறிய கழகத்தின் வங்களூர்க் கிளைக் காரணிகர்.

நன்றி கூறல்.

இவ்வாண்டுகளில் எம்மிடத்து அன்புகூர்ந்து, எம்மைப்புரந்து, போற்றினோர்க்கு யாம் என்றும் மறவா நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம். வழக்கம்போலவே, இச்சங்கப் புரவலர்களாகிய, சீரிய நடையும், கூரிய புலமையும், நேரிய சொல்லும், பேரியற்புகழும் வாய்ந்த அரித்துவாரமங்கலம் திரு. வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார், எவ். டீ எஸ். ஓ. எஸ் ஈ., அவர்களும்; வரிசையறியாது வரையாது கொடுக்கும் வள்ளல், கொலைமடம் பட்ட குரிசில், ஆரியற் கொத்த பேரிசைச் செல்வன், ஆண்டிப்பட்டியின் ஈண்டிய சமீன்தார், திரு. சா. ராம. மு. சித பெத்தாச்சிச் செட்டியார், எம். ஆர். ஏ. எஸ், அவர்களும் எம்மிடத்து உள்ளப்பற்றுடன் சங்கமேம்பாட்டில் குறிக்கொண்டு, அதற்கான வழிகளை ஆய்ந்து வருகின்றனர். எம் தலைவர் பெருந்தகையாரும், சுவடி நிலையத்திற்கு வேண்டிய பல சுவடிகளும், படிப்பிடத்திற்கு வேண்டிய சிலதாள்களும், கல்விக் கழகத்திற்குத் திங்கடோறும் இருபத்தைந்து ரூபாவும் உதவி வருகின்றார்கள். இவற்றையெல்லாம்விட, மேலாக அவர்கள் எம்முள் ஒருவராய் உடனின்று தமிழ்த்தொண்டுபுரிந்து வருதல் எமக்குப் பெருமகிழ்வையும் பேரூக்கத்தையும் தருகின்றது.

திரு. வா. கோவிந்தராசலு நாயுடு அவர்களும், திரு. வா. சுப்பராயலு நாயுடு அவர்களும், திரு. டீ. என். வேங்கடசாமி நாயுடு, பீ. ஏ., அவர்களும், அவர்களுக்குப்பின் அவர்கள் வழியினரும் சங்கத்திற்கு இருப்பிடம் தந்துதவி வருகின்றார்கள். பூண்டி, இராவ்பகதூர் வீ. அப்பாசாமி வாண்டையார் அவர்கள் தம் நலங்களையுங் கருதாது, யாம் வேண்டும் போதெல்லாம் எமக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்து வருகின்றார்கள். தஞ்சை நகராண்மைக்காரரும் நம் சங்கப் படிப்பிடத்திற்குத்தம் ஆட்டை நூறுரூபா உதவியைச் செய்து வருகின்றார்கள். இன்னும், கல்வி கேள்விகளிற்றலைமைதாங்கியுள்ள இராவ்பகதூர் திரு. கே. எஸ். சீனிவாச பிள்ளை அவர்கள், இராவ்பகதூர் திரு. மு. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், திரு. இராமசாமி

வன்னியர் அவர்கள் முதலியோர் சங்கத்திடத்துப் பேரன்பு பூண்டு, எமக்கு ஊக்கமுண்டாக்கி வருகின்றார்கள்.

உறுப்பினரெல்லாம் விலக்கின்றிச் சங்க மேம்பாட்டிற் கண்ணுங் கருத்துமுடையவர்கள் என்னும் பெருமையுடைத்து நம் சங்கமெனினும், திருவாளர்கள் ஆர். வேங்கடாசலம் பிள்ளை அவர்கள், ஐ. குமாரசாமி பிள்ளை அவர்கள், பீ. ஏ., க. சண்முகம் பிள்ளை அவர்கள், பீ. ஏ, த. பீ. சோமநாத ராவ் அவர்கள், சி. தக்ஷிணாமூர்த்திப்பிள்ளை அவர்கள், ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், பா கலியாணசுந்தரம் பிள்ளை அவர்கள், எம். எஸ். கலியாணசுந்தரமையர் அவர்கள், வீ. ஏ. சகராயப் பிள்ளை அவர்கள், பீ. ஏ., பீ. எல்., ஏ. டீ பன்னீர்ச்செல்வம் அவர்கள், பாரிஸ்டர், நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள், த. சி. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்கள், த. கந்தசாமி பிள்ளை அவர்கள், டீ. என். குருமூர்த்திப் பிள்ளை அவர்கள், முதலியோரது பேரூக்கமும், பேருழைப்பும் ஈண்டுக்குறித்துப் பாராட்டற்பாலன. இதுகாறும் கூறிய தமிழன்பர்கட்கும், இன்னும் எம் விருப்பப்படி வந்து சொற்பொழிவு செய்தும், தலைமை தாங்கியும், எம்மை மகிழ்வித்த அறிஞர்களுக்கும்; பலதுறைகளில் சங்கத்திற்கு உதவிபுரிந்து வந்த பெருமக்களுக்கும், மதுரைத்தமிழ்ச் சங்கத்தாருக்கும், தஞ்சை நகராண்மைக்காரருக்கும், யாம் எம் என்றும் மறவா நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன், இவர்களுக்கெல்லாம் நீடிய ஆயுளைத்தந்து, இவர்களெல்லாம் சங்கம் மேன்மேலும் சிறப்புறுதற்குப் பொருட்டாயிருக்கத் திருவருள் சுரக்கும் வண்ணம் எல்லாம் வல்ல இறைவனை வணங்குகின்றோம். தன்னுயிரொப்ப மன்னுயிர்காக்கும் தண்ணளி சிறந்த மன்னர் மன்னவன், மாட்சிமிக்கொரு தனிக்காட்சிசால் ஜார்ஜு தன் செங்கோல் நீடி ஓங்குக வையம்! பொங்கு மங்களம் எங்குந் தங்குக!

---

## வேண்டுகோள்

---

### உயர்தனிப் பழங்குடி வந்த உடன்பிறப்பாளர்காள்!

உங்கள் வாணாட்களில் சிறுபொழுதேனும், நம்மொழி யாது? அதன் திறம் யாது? நம் முன்னோர் யாவர்? அவர்தம் சிறப்பு எத்தன்மைத்து? அவர்தம் வழிவந்த நம் கடமை யாது? என்பனவற்றைக் கருதியதுண்டா? மலர்தலைவையத்து மாண்புற இந்நாள் பலகலை புணரப் பண்பு மேம்பட்ட மொழிபலவோடு செழுநீர்க்கங்கையும், ஆரியமொழியும், பேரிசை இமயமும் கருப்பையிற்றோன்றப் பன்னாள் முன்னரே, வெண்டிரை கொண்ட பண்டைய நாட்டில் அண்டரும் போற்ற அரசுவீற்றிருந்த அருந்தமிழ்த்தாயே உங்கள் அன்னைமொழி. எகிப்தியர், யவனர் முதலிய பழநாகரீகம் பெற்ற மரபினருக்கும் முன்னரே பழநாகரீகம் பெற்றிருந்ததோடன்றி, அன்னோர்க்கும் நாகரீகம் கற்பித்தார் என ஓரமற்ற புலவரெல்லாம் ஒப்ப உவந்து கூறும் உயர்வாய்ந்த உங்கள் முன்னோர் மகிழ்ந்து உரையாடியது இத்தமிழ்மொழி. இந்நாள் வையமுழுதும் பரவி, நடை, உடை முதலியவற்றால் வெவ்வேறு மரபினரென்று மதிக்கப்பெறும் நம்முடன்பிறந்தார்கட்கும், நமக்கும் முன்னோர்களாகிய பழங்குடிகள், இறைவனாற் படைக்கப் பெற்ற முதல் நிலத்தில், ஒரே இல்லில் ஒற்றுமையாய்ச் சேர்ந்து வாழ்ந்த அந்நாளில், தம் உள்ளக் கருத்துக்களைக் கைக்குறியால் உணர்த்திய காரிருட்காலமிரியக் கதிரெழு

தென்ன, ஒலிக்குறியாய் எழுந்து, அன்னோர் நாவினையசைத்துக் கள்ளமற்ற அவர்தம் உள்ளக்கருத்தை வெளியிட்டது உங்கள் பழந் தமிழேயாம். நம் தந்தையும், தாயும் மகிழ்ந்து குலாவி, நமக்கு அறிவும், ஆண்மையும் கரைத் தூட்டியது தமிழே. நம்மக்கள் நம்மை மகிழ்விக்கும் மழலையும் தமிழே. உங்கள் உயிர்க்குயிராய் நின்று நம்மை ஆட்டுவிப்பதும் தமிழென்றறிமின்! உங்கள் உயர் வென்னும் பெருமாளிகைக்கு அடிப்படை யாவதும், உங்கள் உளமென்னும் தாமரைக்கு உறையிடமாவதும், உங்கள் வாழ்வென்னும் மரக்கலம் தெற்றோடும் பெருங் கடலாயிருப்பதும், உங்கட்கு நல்வழி காட்டிப் பேருளென்னும் பாலமுதூட்டும் தாயாயிருப்பதும் தமிழ்மொழியே. இந்நாள், பொன்னாடுவோரும், புகழ்நாடுவோரும் பொலிந்து, தன்னாடுவார் குன்றிக், கற்பாரும், புரப்பாருமின்றிக், கலங்கித், தன்மக்களும் பேசுதற்குக் கூசிக் கைவிட, மக்களுக்கிரங்கித் தளர்வதித் தமிழ்மொழி. தளர்ந் தனள் தமிழ்த்தாய்; தாழ்ந்தது தமிழகம்.

சீர்கெழுமானச் செல்வீர்!

"பழையோர் பெருமையுங் கிழமையும் புகழும்
மன்னிய வன்பினும் மன்னையர் பாடி
நற்றுயில் வரும்வகை யொத்தறுத் தமது
தொட்டிலு லாட்ட அவ்விட்டமா முன்னோர்
தீரமுஞ் செய்கையும் வீரமும் பரிவு
மெண்ணி யிருகணுங் கண்ணீர் நிறையக்
கண்டுயி லாதுநீர் கனிவுடன் கேட்ட
வண்டமிழ் மொழியான் மறித்திக் காலம்
'ஆற்றலம்; ஆண்மையு முரிமையு மொருங்கே
தோற்றனம்' எனச்சொலத் துணிபவர் யாவர்?"

தமிழ்மொழிதன்னை அமிழ்தெனவுண்டனர் நம்முன்னோர். ஈண்டிய சிறப்பிற் பாண்டியராயினார் சங்கமிரீஇத் தங்கமுற்றிருந்தனர். நக்கீரர் முதலாம் நல்லிசைப்புலவர் ஒக்கவிருந்து ஒரு தனித் தமிழ்க்கு இன்னல் வாராதே இனிது போற்றினர். 'அந்தநாள் வந்திலை அருந்தமிழ்ப் புலவோய்! இந்த நாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய்! தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன், விலைதனைப் பெற்றுன் வறுமைநோய் களையே!' என்னத் தமிழ்க்குத் தலையுங் கொடுக்கத் துணிந்தான் தண்ணளி சிறந்த தனிப்பெருங் குமணன். 'இந்நீணிலத்தில், பாடும் புலவர் புகழ் ஒட்டக்கூத்தன் பதாம் புயத்தைச், சூடும் குலோத்துங்கச் சோழனென்றே யெனைச்சொல்லுவரே.' என்னத் தன்னைச் சிறப்பித்தான் சோழர் மன்னர் மன்னவன். 'மன்னவனும் நீயோ? வளநாடு முன்னதோ? உன்னை யறிந்தோ தமிழை யோதினேன்?' என்றாடிச் சென்ற பெரும் புலவனுக்கு அடைப்பை தாங்கி அழகு செய் தான் சேரனன்றோ? பல்கலை நிறைந்த பாவலர் தமக்குப் பல்லக்கேந்தினார் பாண்டியன் முதலோர். நீயிர் என் செய்கின்றீர்? தமிழென்னில் தலை திருப் புகின்றீர். தமிழ்ப்புலவரென்னில் தலைக்கடையிற் றனியிருத்துகின்றீர். தமிழரென்னத் தலைசாய்க்கின்றீர். என்ன நம்பெருமை! கருதுவீர் நந்தம் தமிழ்த்தாய் கட்டுரை. 'மக்காள்! அருந்தி வளர்மின்! நமக்கு, மிக்கோ ரில்லா வீரமாய்ப் பறந்து, முதுசுதந் தரத்தின் முத்திரையாகி, இதுபரி ணமித்தும் மிதயத் துறைக! அன்னியர் பழிக்கொணு அன்னையின் கற் பிற், கிழிவுறின் மார்பினின் றிதுவே சோரியாய்ப், பொழிகநீர் பொன்றிடு

மளவும்! என்றன்றோ, வாழ்த்தி நுந்தமை வளர்த்தனள். அவளுரை, தாழ்த்தன்மின்!' 'ஆரியம் நன்று தமிழ் தீது' என உரைத்தானொருவனை வாயடக்கி வலியழித்தான் நல்லிசை பரப்பிய நக்கீரதேவன். நீரோ, 'குகையுள் உற்று அரிமுக மயிர் பற்றியிழுப்பதொப்பத்' தமிழ்மொழி பேசித் தமிழ்ச்சோறுண்டு, உண்டதை மறந்து, உங்கள் முன்னரேயே நும் அருந்தமிழ்த்தாயை முறையின்றிப் புறம் பழிக்கவும் தலையசைத்துத் தடுமாறுகின்றீர்! நும் மாண்மையும் மானமும் அடங்க இழந்தீர் கொல்லோ?

அருமை மக்காள்!

உலகத்தே தோன்றிய பற்பல மொழிகளும், சின்னாளில் தோன்றி ஓங்கி வளர்ந்து, அழியும் படர் கொடியொப்பவும், சிற்சில நிற்பினும், தம் பழவடிவு திரிந்து, மாறி நிற்கவும், நம் தமிழ் மொழியொன்றே ஆலமாமரமென விழுது பல விடுத்து, என்று மழியாது, ஒரு தன்மைத்தாய்ப், பெருநிழல் கொடுத்துவருகின்றது. இந் நிழலிலேயன்றோ உங்கள் முன்னோர்களும் உலக முன்னோர்களும் வாழ்ந்தது. நம்மருமைத் தமிழ்மொழி எச்சிறப்பும் மிக்க உயர்தனிச் செம்மொழியாயிருப்பவும், இன்னும் உயர்தனிச் செம்மொழி தமிழ் ஒன்றேயாமெனக் கொள்ளக்கிடப்பவும், இதனைப்புறக்கணிப்பதோடன்றிப் புறம்பழிக்கவும் தலைப்பட்டார்கள். படவே, இப்புன்மொழியையும் பொறுத்து மகிழ்ந்தார் பலர்! இங்ஙனமாக எம் அருமைத் தமிழ்த்தாய்க்குண்டாம் வசைக்காற்றாது, அங்ஙனம் வசைகூறுவாரை வாயடக்கி, நம் தாயின் பெருமையை வையமறியவும், அவள் எம்மொழிக்குமில்லாப் பழஞ்செம்மையுற்றொளிரவும், எம்மொழியும் பாச அரசு வீற்றிருக்கவும், யாமெல்லாம் தொண்டினிற் சிறந்த தாய்மொழித் தொண்டாற்றவும் வழியாக இக் கரந்தைத் தமிழ்ச் சங்கம் நிறுவப்பெற்றது. நீவிர் அரசராயினுஞ்சரி, அமைச்சராயினுஞ்சரி, அடிமையாயினுஞ்சரி, தாயிடத்து உங்கள் முதற் கடமையை மறவாது செலுத்துமின்! நம் தாயிடத்தும், உண்மைத்தொண்டினைக் கைக்கொண்ட எம்மிடத்தும் பொறாமையுற்றார் வெற்றுரைகேட்டு மயங்கன்மின்! பிறரையும், பிறமொழிகளையும் குறை கூறுவது எம் கொள்கையன்று. எம்மையும், எம் மொழியையும் முறையின்றிப் புறம்பழிப்பாரைக்கண்டு, மானமழிந்து, மதிகெட்டுப் பேடியராவதும் எம் செயலன்று. 'நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே' என்ற அஞ்சா நெஞ்சனும், எஞ்சா வீரனும் ஆகிய நக்கீரன் வழியினேம். யாய்க்குறும் இடையூறு களைதல் எம்முதற் கடன். யாய், தன் பண்டைய நிலையடைந்து மாண்புறவும், தமிழ் மக்களெல்லாம் ஏனையரோடொப்பக் கல்வி, கைத்தொழில், வாணிகம் முதலியவற்றாற் சிறந்து வளம்பெறவும், உண்மையாக உழைப்பதே எம் மற்றைக்கடன். நம்மவர் யாவரும் நம்மொழியை நன்கு கற்கச்செய்தலும், நம் பண்டைய கலைகளையும், வரலாறுகளையும் ஆய்ந்தறிந்து, அவற்றை நம்மவரேயன்றி வையத்தாருமறியச்செய்தலும், உலகத்தே அவ்வப்போது தோன்றும் கலைகளையும், வரலாறுகளையும் நம்மவரறிந்து நலம்பெற மொழி பெயர்த்தாக்கிக் கொள்ளுதலும், இன்னும் வேண்டும் செயல்களால் தமிழ் மொழியையும், தமிழகத்தையும் மேம்படச்செய்தலும் எம் கடனும். எம் கடனை இழுக்கின்றிச் செய்தலே எம் நோக்கமாம்.

அருந்தமிழ் மக்காள்!

நம் கடமைகளையும், நோக்கங்களையும் முற்றுவிப்பதில் ஒவ்வொரு தமிழரும் எம்மொழி வேற்றுமையின்றி ஒத்துழைக்க வேண்டுகிறோம். ஒவ்

